உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

மன்மத - மாசி - 2016 - பிப்ரவரி    இதழ் - 44

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய செளந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்




தென்னவர் குலத்துத் தேவதை யான
திருமகள் எங்கள் திருக்குல விளக்கே
திருநறுங் கொன்றை சூடிய தேவன்
திருக்கரம் பற்றிய திகழ்மலை வல்லி

மன்னவர் தாள்பணி மரகத மயிலே
மாதவ யோகி ஆண்டவர்க் கருளி
மடமயில் ஆன குலமயில் நீயே
மதுநதி தந்த புதுப்புனல் ஆடிக்

கன்னலும் நெல்லும் கலந்தமை கழனி
காத்தவள் நீயே கவினமை வன்னிக்
கானகம் உறைவாய் கருணைகள் புரிவாய்
கற்பனைக் கெட்டா அற்புதம் ஆனாய்

பன்னலம் தருவாய் திரிபுவ னேசை
பார்த்தருள் வாயெனப் பக்தர்கள் கூடிப்
பாடினர் ஆடிப் பரவசம் உற்றார்
பரவினர் வாழப் பணிப்பதுன் பணியே !

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

### சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

இருநூறு ஆண்டுகள் வரலாற்றுப் பாரம்பரியம் உடைய கோவிலூர் மடாலயம் புதுமைகளை ஏற்றுக்கொள்வதிலே நவீன தொழில்நுட்பங்களைப் பயன்படுத்துவதில் எந்தத் தயக்கமும் காட்டுவதில்லை. நம்முடைய மாணவர்கள் எல்லாத் துறையிலும் புதுமைகளை, தொழில்நுட்பங்களை ஐயம்திரிபறக் கற்றுப்பழகி அவற்றைப் பயன்படுத்தித் தங்களையும் தொழிலையும் நாட்டையும் வளர்ப்பதற்கு உதவ வேண்டும் என்பதே நம்முடைய விருப்பம்.

ஆனால் அதே சமயத்தில் புதுமைகளை வளர்ப்பதற்காகப் பழமையை, பாரம்பரியத்தை, நம்முடைய மரபுகளை அழிப்பதோ விட்டுக்கொடுப்பதோ நமக்குச் சம்மதம் இல்லை. பழையன கழிதலும் புதியன புகுதலும் என்கிற கோட்பாடு ஏற்புடையதே. ஆனால் பழையன எவை என்பதில் நாம் அறிவு பூர்வமாகச் சிந்திக்க வேண்டும் என்பதே நம்முடைய எண்ணம். எவை பயனுடையவை எவை வரலாற்றுச் சான்றுகளாக்கக் கூடியவை என்பதை அறிந்து பயனற்றவை மட்டுமே ஒதுக்கப்பட வேண்டும்.

கோவிலூர் ஆண்டவர் காலத்தில் மரபு வழி நம்முடைய பண்பாட்டைக் காப்பாற்ற வேண்டும் என்ற ஆர்வமும் தாக்கமும் இருந்து வந்திருக்கிறது. கோவிலூர் ஆண்டவர் ஓர் இரண்டு சில கோவில்களையும் சில சமாதிக் கோவில்களையும் கட்டியதினும் பழைய திருக்கோவில்களைத் திருப்பணி செய்வதற்கு நகரத்தார்களையும் மற்ற செல்வர்களையும் தூண்டி வழி நடத்தியுள்ளார்கள். கோவிலூர் ஆண்டவர் காலத்திற்குப் பின்னரே அதிகமான கோவில்களை நகரத்தார் சமுதாயம் சீரமைக்கத் தொடங்கி உள்ளது. மதுரை அருள்மிகு மீனாட்சி அம்மன் கோவிலிலே மொட்டைக் கோபுரம் என்று அழைக்கப்பட்ட வடக்குத் திருவாசலுக்கு ராஜகோபுரம் கட்டியவர்கள் அமராவதிபுதூர் வயனாகரம் குடும்பத்தார். அவர்களுக்குத் துணையாக கலை உள்ளம் கொண்ட தனது மாணாக்கர் தேவகோட்டை

குட்டைத்தானும் இடைஇடையே சென்று மேற்பார்த்து உதவி உள்ளார்கள். இவர்களின் வழிகாட்டுதலின் படியே மீனாட்சி அம்மன் கோவில் வடக்குக் கோபுரமும் கம்பத்தடி மண்டபமும் கட்டப்பட்டன. கம்பத்தடி மண்டபத்தில் சிவபெருமானுடைய 25 வகையான தோற்றங்கள் சிவபுராணத்தில் உள்ளபடி எழிலுற அமைக்கப்பட்டுள்ளன. தொடர்ந்து மூன்றாம் பட்டம் கருணாநிதி சுவாமிகள் தில்லைக்கூத்தனார் திருக்கோவிலில் அமைந்துள்ள மூலவர் உமைபார்வதி திருக்கோவிலைப் புதுப்பித்துக் கட்டித் திருக்குடநன்னீராட்டு விழாவும் நடத்தினர். இவர்களைத் தொடர்ந்து திருக்களர் ஆண்டவர் சோமசுந்தர சுவாமிகள், ராமநாத சுவாமிகள் அனைவரும் பல திருப்பணிகளைச் செய்து வந்தார்கள். நமது குருநாதர் நாச்சியப்ப சுவாமிகள் நான்கு சிவன் கோவிலுக்கும் எட்டுச் சமாதிகளுக்கும் திருப்பணி செய்தார்கள். நாமும் இதுவரை நான்கு சமாதிக் கோவில்களுக்குத் திருப்பணி செய்துள்ளோம். எனவே பாரம்பரியமாகத் திருப்பணிகளைச் செய்தும், செய்வதற்கு நகரத்தார்களையும் பிற செல்வந்தர்களையும் ஊக்குவிப்பதையும் தொண்டாகக் கொண்டுள்ளது கோவிலூர் மடாலயம்.

குருநாதர் காலத்திலே பாரம்பரியத்தையும் கலாச்சாரத்தையும் காப்பதற்காகக் கோவில் சார்ந்த வகுப்புகள் தொடங்கப்பட்டு வகுப்புகள் நடத்தப்படுகின்றன.

2012ல் செட்டிநாடு பாரம்பரிய அருங்காட்சியகம் தொடங்கப்பட்டது. அதனைத் தொடர்ந்து மரபுவழிக் கலைப்பயிற்சியும் தொழிற்பயிற்சியும் அளித்துச் சுற்றுவட்டார மக்களுக்கு உதவ எண்ணியுள்ளோம். அதற்கு முதற்கட்டமாகப் பனை ஓலை கொட்டான் ஆக்கும் பயிற்சி தொடங்கப்பட்டுள்ளது. தொடர்ந்து தையற்கலை, தஞ்சாவூர் ஓவியம் போன்ற கலைகளைக் கற்பிக்கத் திட்டமிட்டுள்ளோம்.

இதற்கு அனைவரும் தங்களுடைய பேராதரவும் ஒத்துழைப்பும் நல்க வேண்டுகிறோம்.

*ஆசீர்வாதங்கள் !*

*ஸ்ரீ சற்குருநாதன் துணை.*

## கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

### (சுதன்மை அருள்பெறு படலம்)

அத்தகு காவல் கூலி யாகமற்(று) அவள்தான் இட்ட
சுத்தநல் அமுது துய்த்தாய் என்றலும் தோகை என்பாள்
வித்தக மகிழ்ச்சி பூத்து விளங்குதன் கோயில் புக்காங்கு
உத்தம வடிவின் உள்ளாள் மறைந்தனள் உலகம் ஏத்த 46

இவள்நிலை இன்ன(து)ஆக அரதன வல்லி என்பாள்
தவல்அருஞ் சோலைஊடு தண்மலர் பலவும் குற்றுத்
துவளும்வெம் பசிவி ராவச் சுடர்முகத்(து) இடைவேர் பூப்பக்
கவல்அரு மனைபுக்(கு) அன்னாய் சோ(று)இடு கடிதின் என்றாள் 47

என்றலும் மகளே ஈ(து)என் இறும்பூது தயிர்வி ராய
சொன்றிகொண்(டு) அணைந்து நீகாத்(து) இருந்தநீர் சுலவு செய்யுள்
நன்றுநான் படைத்தேன் நீயும் நலக்கஉண் டனையே என்றாள்
ஒன்றும்அங்(கு) அறியாள் உள்ள(து) உரைக்குவல் கேட்டி என்றாள் 48

நெடுவயல் காத்தி என்று நீஎனை ஏவி னாய்யான்
கடுவிழி மாத ரோடும் கலந்துபைஞ் சோலை புக்குப்
படுமலர் கொய்தேன் சொல்லப் பயந்தனன் நயந்து காவல்
விடுசெறுக் காத்தேன் அல்லேன் மெய்ம்மை ஈ(து)என்று சொற்றாள் 49

இம்மொழி கேட்ட லோடும் எய்தரும் இறும்பூ(து) எய்தி
அம்மவண் சுதன்மை என்பாள் சிவகுத்த னொடும்ஆ ராய்ந்து
விம்முநீர்ப் பழனம் புக்கு மேதகு கரும்பின் நீழல்
மைம்மலி குழலைக் காணா(து) என்என மயக்கம் பூண்டே 50

இருவரும் அங்கண் நின்ற மலர்இறைந்(து) இமைக்கு மாறு
மருவினர் செலஅவ் வாறு மதுப்பொய்கை தென்பால் செல்ல
ஒருவிலர் ஆகிச் சென்றார் திரிபுவ னேசர் ஓங்கும்
பெரு(கு)ஒளித் தளிஉள் புக்கார் பின்னும்அவ் வழியேசென்றார் 51

தேவியார் கோயில் புக்கார் சிந்தையில் தெளிய ஆய்ந்தார்
பாவியேன் நிமித்தம் இந்தப் பராபரை தானேநந்தம்
ஆவிநேர் மகள்போல் தோன்றி அணிவயல் காத்தாள் என்று
மேவிஆ தரவில் தேர்ந்தார் செய்வது வேறு காணார் 52

சிந்திய மலர்கள் எல்லாம் தேவர்கள் பொழிந்த பூவே
நந்திஇவ் உலகத்(து) உள்ளான் நறியபொற் பூஉண் டாங்கொல்
முந்திய கருணை யாலேமூஉல(கு) ஈன்ற செல்வி
அந்தில்என் செய்தாள் என்று நினைதொறும் அச்சம் பூப்பார் 53

இத்திறம் ஊரில் உள்ளார் யாவரும் ஒருங்கு தேர்ந்து
மைத்தவார் கூந்தல் செல்வி மாமணிக் கோயில் புக்கார்
பைத்தநீர் உலகம் காக்கும் பாவைஓர் பழனம் காக்க
உய்த்தநும் அன்பை யாவர் உரைப்ப(து) என்றுஉரைக்கல் உற்றார் 54

சுதன்மையே நலமே ஆய தொழில்சிவ குத்தா நீவிர்
அதன்மம் இலாரேஆகி அன்புசெய்(து) இறைஞ்சும் பேற்றால்
மதன்மலி புவன நாதன் வாமத்து நீங்காள் உங்கள்
புதல்விபோல் வந்து பண்ணை காத்தனள் பொலிய அந்தோ 55

என்றிடின் உம்மை ஒப்பார் ஏழ்உல கத்தும் இல்லை
என்றும்எங் களுக்கு நீரே இருமுது குரவர் ஆனீர்
என்றும்எங் களையே போற்றி இன்பவீ(டு) அடைவோம் யாமும்
என்றபன் முறைது தித்தார் இருநகர் மாந்தர் யாரும் 56

அவ்வண்ணம் துதித்தார் தம்மோ(டு) இருவரும் அணுகி நோக்கச்
செவ்வண்ணச் சாந்தம் பூசு கபோலமும் செழுங்கத் தூரி
மைவண்ணப் பொட்டும் சாலித் தோகைசால் வள்ளைக் காதும்
இவ்வண்ணம் ஆகத் தேவி இருப்பது கண்ட காலை 57

தூயநெஞ்(சு) உடையள் ஆய சுதன்மைகை குவித்து நின்று
பாயஎன் மகள்போல் சென்று பயிர்தனைக் காக்கும் போது
மேயபேர் அலங்கா ரங்கள் இவைஎன விளம்ப லோடும்
ஆயபேர் அன்பு பொங்க அனைவரும் தொழுதார் பின்னும் 58

தவல்அருங் கருணைத் தேவி தண்மதி முகத்து நின்றும்
உவமைஇல் தயிர்வி ராய ஓதன வாசம் பொங்கி
இவர்தர எழுதல் தேர்ந்தார் இன்பம்மேல் இன்பம் பொங்கக்
கவலைஇல் களிப்பு மேவிக் கைகுவித்(து) எவரும் சொல்வார் 59

குறை(வு)இல் அன்(பு) உகுற்றா நிற்கும் அன்பர்பால் கோ(து) இலாது
நிறைபெரும் கருணை தோற்ற நெற்பயிர் காத்த நீரால்
இறைமகிழ் புவனே சைக்கு நெல்லைநா யகிஎன்(று) ஓர்பேர்
அறைதரல் உற்றார் மேன்மேல் அற்புத மகிழ்ச்சி பொங்கி 60

மருவரும் களிப்பு மிக்கு நகர்உளார் வணங்கி ஏகப்
பொருவரும் சுதன்மை என்பாள் பூரணி திருமுன் நின்றே
ஒருவரும் எய்தாப் பேறு பெற்றதை உன்னி உன்னித்
திருவரும் மகிழ்ச்சி பொங்கத் தோத்திரம் செய்யல் உற்றாள் 61

மெய்அறி(வு) இன்ப ரூப மேயபூ ரணியே போற்றி
பொய்அகல் சிவத்தின் நீங்காப் புண்ணியப் பொருளே போற்றி
ஐயபல் சத்தி ஆகி அடியரைக் காப்பாய் போற்றி
மைஅகல் அடியார் எண்ணம் முடித்திட வல்லாய் போற்றி 62

யாவைக்கும் தானம் ஆகிஇலங்கி சொரூபி போற்றி
யாவைக்கும் சாட்சி ஆகி யாவுமாம் சொரூபி போற்றி
யாவைக்கும் ஏ(து)ஆய இன்பபூ ரணியே போற்றி
யாவைக்கும் எட்டாய் ஆகி எனக்(கு)எளி(து) ஆனாய் போற்றி 63

மறைமுதல் ஆனாய் போற்றி மறைபல ஆனாய் போற்றி
மறைமுதல் பொருளே போற்றி மறையின்உட் பொருளே போற்றி
மறைஉ(ரு) அமைந்தாய் போற்றி மறைமுழு(து) அமைந்தாய் போற்றி
மறைமுடி அமர்வாய் போற்றி மறைமுடி உணராய் போற்றி 64

வானவர் குலங்கள் முற்றும் மகிழ்ச்சியில் துளைய வெய்ய
தானவர் குலங்கள் முற்றும் தவாத்துயர் அழுந்த மாயோன்
ஆனவன் பிறப்(பு)ஓர் பத்தும் மங்கைமெல் விரலில் தோற்று
நானவன் மலர்ப்பூங் கோதைநாயகி நின்றாள் போற்றி 65

மணிவடம் சிருக்கு வெள்ளை வளைவளை திகிரி சூலம்
பணிஅலர் நடுங்கும் வெள்வேல் பாசம்அங் குசம்க ரும்(பு)என்(று)
அணிதவா மலரேப் பத்து மங்கையோர் பத்தும் தாங்கி
நணிஅருள் சுரக்கும் நெல்லை நாயகி நின்றாள் போற்றி 66

மன்னிய சத்தி விந்து மனோன்மணி மேகலை நாளும்
மின்னிய உமைசீதேவி வெள்ளிய பாவை என்னத்
துன்னிய இவராய் வேறு சொற்றிடு மவரும் ஆகி
நன்னியம் அம்செய் நெல்லை நாயகி நின்றாள் போற்றி 67

குவலயம் நிகரும் கண்டக் கொற்றவாள் ஈச னார்க்குத்
தவல்அரும் தாயும் ஆகிச் சான்றபுத் திரியும் ஆகிக்
கவல்அரும் பின்பி றந்த கன்னியும் அனையும் ஆகி
நுவல்அரும் அருள்கூர் நெல்லை நாயகி நுன்றாள் போற்றி 68

காமரு கூந்தல் போற்றி கவின்பொழி வதனம் போற்றி
மாமரு விழிகள் போற்றி வண்தொடிக் கரங்கள் போற்றி
தேமரு கொங்கை போற்றி சிறுகிய மருங்குல் போற்றி
நாமரு புகழ்சால் நெல்லை நாயகி திருத்தாள் போற்றி 69

என்றுநெக்(கு) உருகி அன்பில் துதித்திடும் சுதன்மை என்பாள்
ஒன்றுதன் கணவ னோடும் ஒண்மனை அகத்(து)உள் புக்காள்
அன்றுதொட்(டு) அள(வு)இல் செல்வத்(து) அமர்ந்துபற் பலநாள் வாழ்ந்து
குன்றுதொட்(டு) எய்தான் அன்பர் கோ(து)அறு பூசை ஆற்றி 70

திருந்துதன் செல்வம் எல்லாம் திகழ்சமி வனத்து மேவிப்
பொருந்(து)இரு வருக்கும் ஆக்கிப் புகழ்மிகு கணவ னோடும்
இருந்துதி அமைய ஈற்றில் சிவபதம் எய்தி வாழ்ந்தாள்
மருந்(து)உணா அமரர் யாரும் பொழிந்தனர் வண்பூ மாரி 71

பிருகுவின் வாரம் தோறும் பெருந்தயிர் விராய அன்னம்
பருகுதற்(கு) இனிய் ஆய பாயசம் நிவேதித்(து) அன்பின்
உருகுபு பணிவோர் நெல்லை உமையவள் கிருபை வாய்ந்து
திருகுவெவ் வினைதீர்ந்(து) ஓவாச் செல்வத்துள் அழுந்து வாரால் 72

நேயம்மிக்(கு) உடைய மன்னா நெல்லைநா யகிஎ னும்பேர்
ஆயது தெரிந்தாய் அன்றே மற்றது மறைதும் என்றாம்
பாயசீர் முனிவர் ஏறே பதிதர உணர்தி என்று
தூயவன் பொதியத் தோன்றல் சொற்றிடல் உற்றான் பின்னும் 73

அன்பினுக்(கு) இரங்கி எங்கள் அருள்உறு நெல்லை மாது
நன்புலம் காத்த காதைநலம்உறப் படிப்போர் கேட்போர்
இன்புல வாது மேன்மேல் எண்அரும் செல்வம் துய்த்துப்
பின்புல வாத வெள்ளிப் பிறங்கல்வீற்(று) இருப்பார் உண்மை. 74

***சுதன்மை அருள்பெறு படலம் நிறைவுற்றது.***

*(தொடரும்...)*

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

**(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)**

உள்ளுடம்பின் பயன் உடலுக்குள் உணர்வு இருப்பின் கற்கலாம், கேட்கலாம், கண்ணாரக் காணலாம். இதுவே உள்ளுடம்பின் இன்றியமையாப் பயனாகும். யோகத்தால் அதன் முயற்சியால் செயல்படும் உடம்பின் ஒளி வெள்ளி போல் விளங்கும். பல பயன்களை அடைகின்ற உடம்பு, பயிற்சி முதிர்வால் நாம் விரும்புகின்ற பயனில் ஏதேனும் ஒன்றைக் காட்டும்; துயர் தரும் பிறப்பைத் தொலைக்கும். நல்வினை, தீவினை ஆகிய இரண்டிற்கும் களனாய் இருப்பது உடல். இவ்வாறு நாம் செய்யும் செயல்களுக்கு இடமாய் இருப்பது உடம்பு. இவ்வுடலில் உள்ள ஒன்பது வாயில்களை அடைக்கக் கற்றுக் கொண்டால் உள்ளம் அரனுக்கு இடமாகும். இதனை வள்ளுவர்,

"பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்"

என்ற குறள் மூலம் விளக்குவார்.

"உரன்என்னும் தோட்டியால் ஓர் ஐந்தும் காப்பான்
வரன்என்னும் வைப்பிற்கோர் வித்து"

என்று மேலும் வலியுறுத்துவார்.

அடுத்து யோகத்தின் முதற்படியான "நாடி தாரணை" அதாவது சுவாச பந்தனம் என்று சொல்லக் கூடிய மூச்சுப் பயிற்சியினைப் பற்றிப் பேசுகிறார். அவ்வை கூறும் மூச்சுப் பயிற்சி முறை பிற சித்தர்கள் கூறுவதில் இருந்து எந்த வகையிலும் வேறுபடவில்லை.

நாடிகளின் எண்ணிக்கை 72000. அவற்றுள் பத்து நாடிகளே முதன்மையானவை; நரம்பு வடிவிலான இந்த நாடிகளுக்கு எல்லாம் மேலன வலிமை மிக்க நாடி ஒன்று உண்டு. அது உந்தி தொடங்கிக் கீழிருந்து மேலேறிக் கட்டுப்பட்டு நிற்கும். அந்த நாடி தமரைத் திரி போல் இருக்கும். உந்திச் சுழி தொடாங்கி ஓங்காரமாகிய உச்சியில் நிற்பது; நாடி வழியாக ஊடுருவிச் செல்லும் பரஞ்சுடர்தான் விரைந்து நமக்கு வீடுபேற்றைத் தரும் அனைத்தையும் அறிந்து நிற்கின்ற அந்த நாடிகள் தோறும் செறிந்து அடங்கி நிற்பதே சிவம்.

வாயுதரணை அதாவது காற்றை அடக்குதல் என்பது இதன் பொருள். அதாவது சுவாசத்தைத் தம்பனம் பண்ணுதல். உந்திச் சுழியில் இருந்து மேலேறுகிறது. பிறகு காற்றினை வெளிவிடுதல்

அதனை இரேசகம் என்பர். விரலால் நாசியை மூடி முறையாக வெளிவிட்டு, அதனை மறுபடி அடக்குதல் பூரகம். காற்றைச் சமம் ஆக்கி நிறுத்தளே கும்பித்தல். இப்படி அளவறிந்து காற்றை அடக்கும் பயிற்சி கைவரப் பெற்றால் வாணாள் பெருகும். அங்கி தாரணை - அங்கி என்பது கனலை அதாவது நெருப்பைக் குறிக்கும் அனைவர் உடம்பிலும் இந்தக் கனல் உள்ளது. அதனை மூலக்கனல் என்பர். இந்த மூலக்கனலை நாடிப் பயிற்சியினால் மூலாதாரத்தில் மேலேற்றினால் அது இறை வடிவமாய் அதாவது சோதி வடிவமாய் வெளிப்படும். தூண்டு சோதியாகி இறைவனை அசையாமல் நோக்கில் நமது குறை அகலும்; உள்ளக் கனலை ஒன்றாக்கினால் பொன்னம்பலத்தானை விரைந்து காணலாம். அமுத தாரணை இந்த வகையாய் மூலக்கனலை மேலேற்றி இறையைச் சோதி வடிவாய்க் காண்கின்றவன் பதினாறு கைகளை உடைய சந்திரன் வெளிப்படுத்தும் அமுதத்தை உண்டவனாகிச் சாவா உடம்பெய்துவான்; அந்த அமுது உண்டார்க்கு

வேறு உணவுகள் எதுவும் தேவை இல்லை. இந்த அமிழ்தம் உண்டவர் தம் பிறவி நோயை நீக்கலாம்.

அவன் சிவனுக்கு நிகராவான்; காலன் அவர்களை நெருங்க மாட்டான். அர்ச்சனை எல்லாம் செய்ய வல்ல இறைவனைப் போற்றித் துதித்தல்; அரனை எப்படி அர்ச்சிக்க வேண்டும் என்பதே இதனுள் சொல்லப் பெறுகின்றது. உடம்பில் மூன்று மண்டலங்கள் உள்ளன. அவை வளி மண்டலம் எனப்படும் காற்று மண்டலம், அனல் மண்டலம், புனல் மண்டலம் என்பனவே. இவற்றை யோகத்தால் அடக்கி வழிபடுவதே அருச்சனை. மனம் என்னும் இருக்கையில் இறைவனை அமர்த்தி உள்ளத்தாலேயே போற்றுதல் அருச்சனை. அதாவது இது புற வழிபாடு அன்று; அக வழிபாடே இது. உள்ளமே பீடம், உணர்வே சிவன். அவனுருவை இடைவிடாது நினைத்தலே வழிபாடு. ஆறு மூலாதாரமும் குண்டலினி வழியாக மேலேறும் போது, சிவன் வடிவை வேறுபாடற்ற நிலையில் நினைப்பதே அருச்சித்தல் என்பதாகும். இவற்றிற்கு மந்திரங்கள் தேவை இல்லை இடைவிடாது நினைத்தலே அருச்சனை. உள்ளுணர்தல் : பல்லூழிக் காலம் தவம் செய்தோர் ஈசனை உணர்வால் நினப்பவரே யோகிகள். அந்த நல்லுணர்வு தவத்தால் பெறுவது. பண்டைப் பிறவியில் செய்த தவத்தின் பயனால்.

இறையை நிலை குலையாத தவத்தால் ஆராய்ந்து உணர்வு பெற்றால் அதுவே தவத்தினால் உண்டாகும் பயன். இவ்வுணர்வு பெறுவான் உடல் துன்பம் பொறுத்து, மனம் ஒன்றி இருப்பதே உயரிய தவம் நம் உள்ளத்திருக்கும் இதைத்தான் வள்ளுவர்

"உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்(கு) உரு"

என்று கூறினார்.

மவுனத்தினால் நாம் பெறுகின்ற உணர்வு, ஞானத்தினால் ஆகிய உடம்பின் பயன், கடவுளோடு ஒன்றிய ஞானத்தை முயன்று பெறுவதுதான் தவம். மனித நடமாட்டமற்ற காடும், மலையும் நாடிச் சென்று தனிமையில் தவம் செய்தால் உண்டாவதே உணர்வின் பயன்.

பத்தியுடைமை பக்தியுடன் உள்ளத்தில் அன்பு வைத்து நோக்கினால் முத்தி பெற அதுவே மூலமாக இருப்பது என்பதை உணரலாம். பாடியும் ஆடியும் சிவத்தை நேசிக்க வேண்டும்.

தொழுதும் அழுதும் ஈசனைக் கண்டோர் ஞானியர்
"அழுதால் அவனைப் பெறலாமே".
என்பர் ஆன்றோர்.

"தொழுகையர் அழுகையர் துவள்கையர் ஒருபால்"

என்பது திருவாசகம். இறைவன் புகழைப் பலவாறு போற்றி வணங்கி, அன்பால் அவனை நினைக்க வேண்டும் கண்ணாரக் கண்டு அன்புடன் அவனை நோக்கினால் உள்ளத்தில் ஈசனது ஒளி உண்டாகும் அன்புடன் என்புருகி, அதாவது நெக்குருகி நிற்பார். அவரது மனமே இடமாய்க் கொண்டவர்; அவருடைய நெஞ்சமே கோயிலாக் கொள்வான் ஈசனைக் கண்ணாரக் கண்டு கையாரக் கும்பிட்டு, அரகரா என்று கூத்தும் ஆடி மகிழ்வார்தம் நோக்கில் ஈசனை எண்ணிய பொழுதே காண்பார். நாதனே என்பர் அவனை நாம் நினைத்து மனமுருகி வேண்டினால் ஈசன் அவர் மனத்தே நிலையாக நிற்பான். அனைத்து உயிர்களையும் நேசிப்பவர் உள்ளத்தை நாடி அவன் வருவான். மெய்ம் மயிர் பொடிப்ப விதிர்ப்புற்று நேசத்தால் பொய்யில்லா ஈசனைப் போற்றுக; எங்கும் நிறைந்த ஈசனை அறிந்து ஆராய்ந்து ஏற்றுக் கொள்ள வேண்டும். இதனையே அவ்வையார் விநாயகர் அகவலிலும் சுட்டிக் காட்டுகிறார்.

"ஐம்புலன் தன்னை அடக்கும் உபாயம்
இன்புறு கருணையின் இனிதெனக்(கு) அருளிக்
கோடாயுதத்தால் கொடுவினை களைந்தே
உவட்டா உபதேசம் புகட்டிஎன் செவியில்
தெவிட்டா ஞானத் தெளிவையும் காட்டி
ஐம்புலன் தன்னை அடக்கும் உபாயம்
இன்புறு கருணையின் இன்பதெனக்(கு) அருளிக்
கருவிகள் ஒடுங்கும் கருத்(து)அறி வித்தே

இருவினை தன்னை அறுத்திருள் கடிந்து
தலம்ஒரு நான்கும் தந்தெனக்கு அருளி
மலம்ஒரு மூன்றின் மயக்கம் அறுத்தே
ஒன்பது வாயில் ஒருமந் திரத்தால்
ஐம்புலக் கதவை அடைப்பதும் காட்டி
ஆறா தாரத்து அங்குச நிலையும்
பேராநிறுத்திப் பேச்சுரை அறுத்தே
இடைபிங் கலையின் எழுத்தறி வித்துக்
கடையிற் சுழுமுனைக் கபாலம் காட்டி
மூன்று மண்டலத்தின் மூட்டிய தூணின்
நான்றெழு பாம்பின் நாவில் உணர்த்திக்
குண்டலி அதனில் கூடிய அசைப
விண்டெழு மந்திரம் வெளிப்பட உரைத்து
மூலா தாரத்தின் மூண்டெழு கனலைக்
காலால் எழுப்பும் கருத்தறி வித்தே
அமுத நிலையும் ஆதித்தன் இயக்கமும்
குமுத சகாயன் குணத்தையும் கூறி
இடைச்சக் கரத்தின் ஈரெட்டு நிலையும்
உடற்சக் கரத்தின் உறுப்பையும் காட்டி"

என்பது அகவல்.

*(தொடரும்...)*

# மடாலய நிகழ்வுகள்

23.01.2016 அன்று பள்ளத்தூர் முத்துவீரப்ப அய்யா குருபூசையும், 27.01.2016 அன்று மேலமடம் பழநியப்ப அய்யா குருபூசையும், 31.01.2016 அன்று திருப்புவனம் ஸ்ரீகாசிகானந்த சுவாமி குருபூசையும், 05.02.2016 அன்று சாதுபரமானந்த சுவாமிகள் குருபூசையும் சிறப்பாக நடைபெற்றன.

23.01.2016 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் அப்பூதி அடிகள் பற்றி முனைவர்.மு. பழநியப்பன் சொற்பொழிவாற்றினார்.

26.01.2016 அன்று குடியரசு தினவிழா மிகச் சிறப்பாக நடைபெற்றது.

27.01.2016 அன்று நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியின் விளையாட்டு விழா நடைபெற்றது.

28.01.2016 அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி விளையாட்டு விழா நடைபெற்றது.

29.01.2016 அன்று முத்துராமலிங்க ஆண்டவர் மழலையர் மற்றும் தொடக்கப்பள்ளியின் விளையாட்டு விழா நடைபெற்றது.

30.01.2016 அன்று கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக்குலேசன் மேல்நிலைப்பள்ளியின் விளையாட்டு விழா நடைபெற்றது.

05.02.2016 அன்று முத்துராமலிங்க ஆண்டவர் மழலையர் மற்றும் தொடக்கப்பள்ளியின் ஆண்டு விழா நடைபெற்றது.

06.02.2016 அன்று கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக்குலேசன் மேல்நிலைப்பள்ளியின் ஆண்டு விழா நடைபெற்றது.

## கோவிலூர் திருக்கொற்றவாளீசர் அந்தாதி

(நற்றமிழ் நாவலர். நா. மீனவன்)

கோவிலூர் ஆதீனம் ஐந்தாவது ஆதினகர்த்தர் திருக்களர் ஆண்டவர் வீரசேகர ஞான தேசிகர் அவர்களின் மாணாக்கர் சுப்பையா அவர்களால் இயற்றப் பெற்றது (1910)

சிற்சொருபம் ஆன சிவராச கட்கேசன்
பொற்சொருபம் போற்றிப் புகழவே - தற்சொருப
ஆனை முகத்தன் அரவிந்த மாகதியற்
றேனை எனக்கு இன்று இனி

நூல்

பூரணனே யின்பப் பிராதனனே பொன்அளிசேர்
தாரணனே தந்தாய் இத்தாரணியின் - காரணனே
மன்னவாள் ஈச மகிழ்ந்து திருநெல்லைக்
கன்னலே என்னைமிகக் கா 1

கார்ஊர் மிடற்றானைக் கண்ணுதலைக் காணுமா(று)
ஊர்ஊர்கள் தோறும்நீ உற்(று)உழன்றாய் - ஏர்ஊரும்
வன்னி வனத்தை வணங்கிலையால் நெஞ்சகமே
அன்னவனைக் காண்ப(து) அரிது 2

அரிதாய் அமுதாய் யார்அறிவார் ஒன்றாய்
உரிதோல் உடையானாய் ஒண்சீர் - விரிதேன் (ஆறு)
ஆறோ(டு) உடையாருக்(கு) அன்(பு)இயற்று நெஞ்சகமே
மால்தேடு உடையார்க்கு மற்று 3

மற்றும் தொடர்ப்பா(ல்) எவன்கொல் பிறப்(பு)அறுக்கல்
உற்றார்க்(கு) உடம்புக் குகைஎன்(று) இங்(கு) - கற்றார்கள்
ஓதும் பெருமொழியை உட்கொண்டு வன்னிவனத்(து)
ஆதியினை நெஞ்சே அறி 4

அறிவோனதுருவம் ஆவான் அடைந்தேன்
குறியேதோ யான்அறியேன் கூரோய் - பொறியோடே
ஓடே எனில்உள்ளம் ஓயா வளிநிகர்நிற்
கூடேன்என் னோஅசையாக் குன்று 5

குன்றாக் குடியர் குறத்தி மணவாளர்
கன்றாப் புதல்வர்உமக்(கு) ஆம்மாமா - என்றாக்கால்
நீஅசியைக் கொண்டுவரல் நீதியே நீலிமலை
யாய்வயலைக் காப்பதுவும் ஆம் 6

ஆமோ வலவோஎன்(று) ஐயம்உறும் பாடில்லை
காமாரி யாம்என்னுங் கட்கேசன் - பூமா(து)அண்
வன்னி வனத்தை வளம்படவே நீயடையில்
உன்அதில்நன்(கு) உள்ளமே உண்டு 7

உண்டோ இலையோதான் ஒள்இடையின் எல்லைக்(கு)என்(று)
உண்டாம் பெரும்பீதி உற்றோதான் - கொண்டாய்நீ
நல்ல விடபானம் நம்கொற்ற வாள்ஈச
ஒல்லை எனக்கே உரை 8

உரையாய் உசிஉடையாய் யோகரேபாம்பை
யிரையா யரியாவை யேற்குந் - திரைஆளும்
நெல்மாதுங் காதலரும் நீங்கார் முரண்என்றோ
சன்மார்க்க சங்கரன்ஆ னாய் 9

ஆனாய் உலகாய் அதன்உள் நுழைந்தனைநீ
வான்ஏய் கடத்தின் வளன்ஒப்ப - ஏனோதான்
பேதத்தைப் பேசிப் பிறழ்ந்து திரிகின்றார்
ரோதத்தை வாளோய் உக 10

உகத்தொ லொடும்இகத்தல் ஒன்றேனுந் துன்றா(து)
இகத்தில் அடிநாயேன் இன்பே - அகத்(து)உறுமா
செய்வாய் கழனித் திருநெல்லைக்(கு) இன்அமுதே
ஜவாள் இரதத்தாஅ யான் 11

ஆனை முகன்ஆனாய் ஆறுமுக னும்ஆனாய்
ஆனை முகன்ஆனாய் வாளீச - ஆனைஉகந்(து)
ஏறினாய் நெல்லைக்கு இனிய தவன் ஆனாய்
பாறினாய் என்னை இனிப் பார். 12

பார்ஆதி எட்டாய்ப் பரந்து விளையாடல்
தேரா(து) இருப்பார்க்குத் தெய்வமாய்க் - கார்ஓதி
நெல்நா யகியோடு நீகொற்ற வாளீச
பொன் ஆலயம்அமர்ந்தாய் போய் 13

போக்கும் வரவும் புணர்வும்இலாப் பூரணத்தைத்
தேக்கும் திரமனத்துத் தேன்முனிக்குத் - தீக்கானில்
சாம முடிகாண்பார் சார்வான் வரந்தந்தாய்
ஏமம்உற நின்கருணையே 14

ஏதோ அறியேன் இனிவருவ(து) எந்தாயே
மாதே சரணாய் மருவினேன் - தீதேதான்
செய்து திரிகின்றேன் சின்மயமாய் நின்றில்லேன்
எய்துவ(து) இங்(கு) என்னே இனி 15

இனியாய் இனிநாயேன் நின்தாளில் சேர்ந்தால்
கனியாதோ நின்னுள்ளம் கட்கோய் - பனியாலே
வாடுங் கமலத்தில் வாடிய(து) இங்(கு) என்உள்ளம்
கூடுங் கருணையினைக் கூர் 16

கூரார் இறைவாளைக் கொண்டுபணி கொண்டாய்முன்
ஏர்ஆர் திருநெல்லைக்(கு) ஏற்றோனே - வீரேசற்(கு)
என்ன இயற்றிநீ இந்நகரைத் தொல்லிலினும்
உன்னதியாய்ச் செய்துகொண்ட தோ 17

ஓங்காரத்(து) உட்பொருளாய் ஒன்றாணய் அமலமதாய்
ஆங்காரம் நீங்கினார்க்(கு) ஆர்அமுதாய்ப் - பாங்காக
நின்றான் அசிஈசன் நீங்காமல் எங்(கு)எங்கும்
நன்றாய்ப் பணிந்திடவே நாம் 18

நாம உரு(வு)எல்லாம் நம்கொற்ற நாதனைவிட்(டு)
ஆம்அணுவும் இல்லைஅவன் ஆணைஎனில் - பீமம்உறக்
காய்வதுவும் மாய்வதுவுங் கால்நிகர்த்த நெஞ்சகமே
தோய்வதுவும் ஆர்ஆரைச் சொல் 19

சொல்லாய் மடநெஞ்சே சொன்ன மலைவிலியைப்
புல்லாய்ப் புரத்தை எரித்தானை - நெல்லாய்க்(கு)
இனியானைப் போற்றா(து) இருந்தாயே என்என்
இனிஆர்ந்து துன்(பு)அளிப்ப தே 20

தேன்ஆர் கமலத் திரள்சேருஞ் செந்தடம்ஆர்
வானோர் பணிகழனி வாள்ஈச - மானார்
மயலில் சுழலாமல் மன்னிடுவான் நீஉன்
புயலில் கருணையேஉன் போது 21

போ(து) அதனைப் போக்கப் புகல்வாய் பெருநூலாம்
வாதுஅதனை நெஞ்சகமே வாடாதே தீ(து)அகலக்
கள்ளம் தனைத்தவிர்த்துக் கட்கேசன் கால்மலரை
உள்ளபடி உள்ளத்தே உன் 22

உன்னஉன்ன ஓடிவிடும் உன்உருவம் கட்கேச
உன்னா(து) இருந்தால் உணரலாம் - பின்னம்இலா
நல்ஆற்றை விட்டுவிட்டு நாயேன் அலைந்தேனே
சொல்லாற்றல் என்பயக்கும் சொல் 23

சொல்லிற்(கு) அடங்காத சோதிஉனை வாதியர்கள்
சொல்லிற்)(கு) அடங்கச் சொலஉறுதல் - நல்எழிலா
அம்பரத்தைத் திக்காய் அணிந்த அசிஈசா
அம்பரத்தைக் கட்டலைஒப் பாம் 24

ஆமோ அயின்றிடுதல் ஐம்முகத்(து)எம் வாள்ஈச
மாமா முகன்நீயு மற்(று)ஆறாம் - மாமுகனும்
அன்னத்தின் பூரணியாள் ஆவிஎன இல்லக்கால்
என்னத்தைப் பண்ணுகிற பீர் 25

ஈர்ஆ(று) ஐயைந்தோ(டு) ஈர்நான்கிற்(கு) அப்பாலாஞ்
சீராருங் கொற்றேசன் சேவடிகள் - ஓராமல்
கற்றால் கலைகளையே கண்டார் நகையாரோ
பற்றார் புரிவாரோ பார் 26

பாரோரும் விண்ணோரும் பற்றாப் பரஞ்சுடரைத்
தேராதே நெஞ்சே திரிந்(து)எய்த்தாய் - பேர்ஏதும்
இல்லானே என்றாலும் ஏற்றான்எம் கட்கேசன்
நல்லார் தொழும்பதமே நாடு 27

நாடிகளும் சோரம்உற நன்(கு)எனின்என் நல்தாதாய்
தோடம் உ(று)என் தீமனதைச் சோரம்செய்(து) - ஓடிவிடு
நாயேன் எவர்பால் நாட்டேன் உன(து)ஆணை
பேயேன்பொய் பேசுவனோ பேசு 28

பேச்சும் பொருளும்போல் பேதையோடு நீநின்றால்
மூச்சும் விடப்படுமோ மோகத்தை - ஓச்சம்என
மற்றவர்கள் கொற்றேச மாகருணை நீபுரியில்
அற்று விடல்அடியேன் ஆம் 29

ஆமோ அகிலத்(து) அரும்போகி தியாகிகள்தாம்
கோமான் உனைஅன்றிக் கொற்றேச - சீமானே
மாதுக்குப் பாதிகொடுத்(து) ஆடைஎன மாதிக்கை
தீதற்(று) உடுத்ததிரத் தே 30

தேவாதிதேவன் திருநெல்லை நாயகன்நற்
பூவார் திருவடியிற் போந்தக்கால் - சாவாதே
ஓவல் எளிதென்(று) உயர்மா ளிகைமாட்டுக்
கூவி அழைக்கும் கொடி 31

கொடிமேல் மலையிருக்கும் கொற்றேசர் ஊரில்
அடியார் அதன்அருகே யாரார் - பிடியோ(டு)
அன்னம் பயின்றுவர வாவா குயில்பாடப்
பொன்அம் மயில்ஆடும் போய் 32

போய்அழைகான் மைத்துனனைப் பொங்(கு)அரவ நாணாயாத்(து)
ஏய்சருமம் கோவணம்ஆ யேன்என்று - காய்கலுழற்
கண்(டு)அரியும் கீழ்வீழக் கான்நோக்குங் கட்கேசன்
புண்டரிகத் தாள்நிதமுதம் போற்று 33

போற்றும் குமரேசன் பொன்தலையின் மேல்ஏறி
யாற்றிற் கரமிட்டே ஆகாவென்(று) - ஏற்றுகணில்
காய்ச்சற்கோ கட்(டு)அழலுங் கங்கையதுங் கட்கேச
தூய்ச்சற்(று) அணிந்ததுநீ சொல் 34

*(தொடரும்...)*

## கலாம் மறைவுக்குக் கண்ணீர் அஞ்சலி

(ம. கார்மேகம்)

ஆற்றல்மிகும் விஞ்ஞானி! அன்பின் ஊற்றாய்
அணுவாய்வு செய்துயர்ந்த அறிவின் மேலோய்!
போற்றுகின்ற நல்லெண்ணப் புனிதம் கொண்டோய்!
புண்ணியம்சேர் இராமேசுவரத் தலத்தில் தோன்றி
ஏற்றமிகும் பதவிக்கே இசைந்த போதும்
எளிமையினைக் கடைப்பிடித்த இனிய ஆசான்
வீற்றிருந்த குடியரசுத் தலைவர் என்ற
மேலான இருக்கைக்குப் பெருமை தந்தோய்!

இளைஞர்களின் எழுச்சிமிகும் இளைஞன் ஆனாய்;
இளம்பிஞ்சுக் குழந்தைகளின் இதயம் வீற்றாய்;
விளைந்துவரும் சமுதாயக் கொடுமை எல்லாம்
வீழ்ந்திடவே விழிப்புணர்வு வேண்டும் என்றாய்;
வளைந்துபிற நாடுகளை வணங்கா வண்ணம்
வல்லரசாய் நம்நாடு வளரச் சொன்னாய்;
கலைந்துவரும் கனவுகளாய் இன்றி வாழ்வில்
காட்டுகின்ற கடுமுயற்சி கனவே என்றாய்!

அறிவறிந்த தமிழ்மகனே அணுவின் ஞானி
அனைத்துலகும் உன்மறைவால் அழுத தய்யா !
பிரிவறிந்தும் துயர்தாங்கிப் பெருகும் கண்ணீர்ப்
பெருவெள்ளம் தனில்நாங்கள் நீந்து கின்றோம் !
உறவெனவே அனைவரையும் உளத்தில் தேக்கி
உயர்நிலையை அடைந்தவரே ! உயர்ந்த போதும்
பிறந்தஇடம் மறவாத பெரியோய் ! விண்ணில்
பேரறிஞன் வேண்டுமென்றா பிரிந்து சென்றாய் !

எம்மதமும் சம்மதமாய் ஏற்றுக் கொண்டோய்
இல்லறத்தை ஏற்காமல் இல்லம் காத்தாய்
எம்மதமும் கொள்ளாமல் இனிய பேச்சால்
எவரிடத்தும் பகையின்றி நட்புக் கொண்டாய்
அம்மையையும் அத்தனையும் போற்றி நல்ல
அண்ணன்மார் தமக்கையிடம் அன்பு சேர்த்தாய்
பொய்ம்மையிலா மெய்ஞானி புவியோர் போற்றும்
புனிதாநீ மேலுலகம் போன தேனோ !

முடிவறியாக் கனவினைப் போல் முடிந்து போனாய் !
முற்றிலுமாய் உன்நினைவை முடிச்சுப் போட்டாய் !
தொடமுடியாக் கோள்களுக்குக் கணைகள் ஏவித்
தொட்டுவிட்ட பேரறிவே ! நீயே சென்று
தொடுவதற்குச் சென்றாயோ ! வானோர் உன்னைத்
துணையாக அழைத்தனரோ ! எமது நாட்டின்
விடியலுக்கு வித்திட்ட வேந்தே ! நீதான்
விண்சென்றாய் ! வெதும்புகிறோம் ! விரைந்து வாராய் !

## கோவிலூர் ஆண்டவர் அருளிய
## சுபாநுவத் திருவாக்கு (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

### குருவை அடைதல்

(முற்குறிப்பு : ஈஸ்வரனே குருவாக அவதரிக்கிறார் எனும் கோட்பாடு காரணமாக, குருவைத் தெய்வமாகவே வழிபாடு செய்வது அத்வைதச் சிறப்பாகும்.

இப் பகுதியின் பாடல்களில், தம்மை எவ்வாறு வழிபட வேண்டுமென ஆண்டவர் கூறவில்லை. மாறாக, தெய்வவழிபாட்டையும் கூட குரு வந்தனமாகவே துதிக்கிறார். நாகபட்டினத்திற்கு அருகே, சிக்கல், பொருள்வைத்த சேரியில் சுமார் 200 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த உகந்தலிங்க ஞானதேசிக சுவாமிகள், ஆண்டவரது குரு ஆவார்.

ஆண்டவர், அவர்தம் குருவைப் பணிந்து போற்றினார், எவ்வாறு மன்றாடி வேண்டினார், எவ்வாறு ஏற்கப்பட்டார், மற்றும் எத்தகைய பயனடைந்தார் எனக் கூறும் பாடல்கள் மூலமாக, நாம், நமது குருவை எவ்வாறு காண வேண்டும் எனும் அறிவு பெறுகிறோம். குரு பற்றிய மேலும் சில உட்பகுதிகள், அடுத்த இதழிலும் தொடரும்.)

### I குருவைச் சேர்தல் :

1. .... பெத்தமுறு பாவனையில் இற்றைவரை வீணாய்
   பிறந்து இறந்து எய்த்துவிட்டேன்
   பெறல்அரிய உன்கருணை பெற்றுநா னாவிதப்
   பிராந்தியது தீர்வது என்றோ?
   ........................ அடியர் துதி
   பொன்றாத பரம குருவே
   மத்தனேன் எனதுமதி நின்பாத வனசத்தில்
   வைத்திடுவது எந்த நாளோ

வணிகர்குல ஒஷதிகள்தழையஉப தேசமழை
மாறாது பொழியும் முகிலே. (86/134)

........... குருவை அடைதல்

2. ..... நீழல் என அறியாது, வீணாள் கழித்த எனை
நின் அடியன் ஆக்க நினைவாய்....... (49/75)

3. .... அலைகின்ற வீணன்உனை என்றைக்கு அடைந்து நிலை
அதுவாவது எந்தநாளோ ? .... (47/74)

## II குருவைப் பணிந்து போற்றுதல் :

1. தடம்உயர் கடல்சூழ் பொருள்வைநன் னகரம்
தனில்மனுத் தேகமாய் விளங்கித்
திடமுடன் சுருதி சாஸ்த்திரவே தாந்தம்
சிந்தையில் அனுபவம் தெளிந்து
படிதனில் தனைவந்து அடுத்தவர்க்கு இரங்கிப்
பரமசற் குருவதாய் உணர்த்தி
அடியவர் அடிகட் கேஉகந் தனனே (79/126)

2. ....ஊனை அபிமானித்தே உழல்வேன் தன்னை
ஒப்பிலா உனக்கே ஆள் ஆக்காய் போற்றி. (55/80)

3. பொறிஆ றாலும் காண்பரிய
பொருளோய் உனது பதம்போற்றி
அறியா நின்றும் அறிந்திலனாய்
ஆனாய் உனது பதம்போற்றி
பிறியா, பிறியத்து அப்பாலாம்
பெரியோய் உனது பதம்போற்றி
சிறியேன் அறிவுக்கு அறிவான
சித்தாம் உகந்த குருபோற்றி. (66/100)

## III குருவிடம் மன்றாடி வேண்டுதல் :

1. தன்னைக் காணா அறிவாலே
சகத்தைப் பேதமாக் கண்டே
என்னது இதுயான் இவன்என்னும்
இடர்உற்று உழன்றேன் எம்கோவே ...... (72/112)
..... குருவை அடைதல்

2. .... பொல்லேன் அவிவேகத்தாலே
புன்மை விடய மாக்கரைந்தே
அல்லற் படுவது உனக்குஅழகோ?
அத்தா, அண்ணா, ஆரணனே. (64/97)

3. .... மத்தனேன் எனதுமதி நின்பாத வனசத்தில்
வைத்திடுவது எந்த நாளோ ..... (86/134)

4. ..... பிறர் செல்வம் வாங்கக் கொடிகட்டிச்
சுற்றிச் சுழன்ற என்னை
நீங்காத என் அருகில் எந்நேரம், எப்பொழுதும்
நிலையாக வைக்க நினைவாய் .... (42/71)

## IV குருவால் ஏற்கப்படல் :

1. ..... வல்லைஎனது உடல்ஆவி நிதிநான் அளித்திலேன்
வலியஏற்று ஆண்ட குருவே... (88/136)

2. துஷ்டர்களை நிக்கிரகம் பண்ண வேண்டித்
தூயோர்கட்கு அனுக்கிரகம் செய்ய வேண்டி
இஷ்டமுடனே தசாவ தார மாக
எடுத்துமுன் இன்னாளில் அடியேன் தன்னைச்
சிஷ்டன் எனும் படியாக்க நினைத்த போதே
செலமாலங்கட்டியதாய்த் திரண்ட தேபோல்
இஷ்டமுடன் பதினொன்றாம் அவதாரத்தை
எடுத்தும்எனை ஆண்டவா றுஎன்னே என்னே.(76/120)

3. முத்துவெண் நகையார் சித்தம்அது ஒக்க
முயல்வதே கருமம்என்று எண்ணிப்
பித்தரின் மயங்கிப் பிறவியங் கடலில்
பீழையுற்று அழுந்துறு வேனைச்
சித்தம்அது ஒக்க, வா என அழைத்துத்
திகழும்நீ பிரம்மம் என்று அருளும்
உததம குருவே பொருள்வைமா நகர்வாழ்
உகந்ததே சிகசிகா மணியே. (67/103)
...... குருவை அடைதல்

V அடைக்கலம் (சரணாகதி) பெறுதல் :

1. .... தாராள மாகநான் அவர்கள் உறவு என்பதும்
சதாகாலம் என்னை அவர்கள்
சார்வாக எண்ணினதும் இப்படி முடிந்ததால்
சரண் உனை அன்றி உளதோ ?
வாராதும் வாராது வருவதுவும் வந்ததுஎனும்
மதிதந்து அளிப்பது என்றோ
வணிகர்குல ஒஷதிகள் தழையஉப தேசமழை
மாறாது பொழியும் முகிலே. (85/133)

2. கடலே ஞான வேதாந்தக்
கரும்பே எனக்குஓர் அருந்துணையே
இடரே அருகுமாறு எனக்குஓர்
இச்சை ஏதுஉன் கழல் அல்லாது ?
உடலே பொருளே ஆவிஎனும்
உகந்தாய் மூன்றும் உனக்குஎன்றால்,
படரும் வினையை அகற்றி அருள்
பரிபூர ணாஉன் பதம்போற்றி. (67/102)

*(குருவை அடைதல் பற்றிய மேலும் சில உட்பகுதிகள் அடுத்த இதழில் தொடரும்.)*

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**




# திருவண்ணாமலை கிரிவலத்தில் தமிழ்த்தாய் கோயில்

1984 இல் ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு நடைபெற்ற வேளையில் உருவான தமிழ்ச்சுரங்கம் பேராசிரியர் முனைவர் ஆறு. அழகப்பன் அவர்களைத் தலைவராகக் கொண்டு அருந்தமிழ்ப் பணிகளைச் செய்து வருகிறது. தமிழன் என்ற உணர்வுகளைப் பெற, சில குறியீடுகளை ஒருபணியாகக் கொண்டுள்ளது. அவ்வகையில் உலகத்தமிழர் உவப்ப, தமிழ்த்தாய் உருவம் உருவாக்கிப் பரப்பும் பணியில் தொடர்ந்து ஈடுபட்டு வருகிறது. தமிழ் உணர்வு மங்காமல் இருக்க, தமிழ்த்தாய், திருவுருவத்தை, திருவண்ணாமலை கிரிவலத்தில் தமிழ்த்தாய் கோயில் உருவாக்கி வீற்றிருக்கச் செய்யும் பணியில் ஈடுபட்டுள்ளது. முயற்சி திருவினையாக்கிட அருள்மிகு அண்ணாமலையார் அருள் பாலிப்பாராக.

**தமிழ்ச்சுரங்கம்**
சென்னை - 92